[Sri K. Anbazhagan] [5th September 1960

தீர்மானித்து முடித்துவிடக் கூடிய பிரச்னை அல்ல. மொழிப் பிரச்னை காலத்தைஒட்டி மாறிக்கொண்டே இருக்கும். அது மட்டும் அல்ல. மொழியினுல் வளர்ந்து வருகிற உணர்ச்சி காலத்தைஒட்டி மாறிக்கொண்டே இருக்கும். 20 ஆண்டுகளுக்கு முன்பாக இருந்ததுபோலல்லாமல் இப்பொழுது தமிழ் எத்தனையோ துறைகளில் வளம் பெற்றிருக்கிறது. மக்களும் உணர்ச்சி பெற்றுள்ளனர். மக்களின் மொழிப்பற்று நாளும் வளர்கின்ற உணர்ச்சியாகும். மக்களின் மொழி உணர்ச்சி வளர்கின்ற காரணத்தினுல் அந்த உணர்ச்சி இந்தியுடன் மோதிக்கொள்ளக்கூடாது என்று விரும்பினுல், வளர்கின்ற உணர்ச்சிக்கு மதிப்பு அளிக்கவேண்டும். அரசியல் சட்டத்தைத் திருத்தி ஆங்கிலத்திற்கு நேரடியாக ஆட்சி மொழி உரிமை அளிக்கவேண்டும். பிறரிடத்தில் தயவு தாட்சண்யம் காட்டி ஆங்கிலத்திற்கு இடம் அளிப்பது என்பது பிற மொழி மக்களை ஏமாற்றப் பயன்படுமே தவிர, கிளர்ச்சிக்களைத் தள்ளிவைக்கவும் கொந்தளிப்பை மூடி வைக்கவும் பயன்படுமே தவிர, உண்மையிலேயே பிற மொழி மக்களின் உரிமைகளை முழு அளவுக்குப் பாதுகாப்பதாகாது.

பண்டித நேரு அவர்கள் உறுதி மொழி அளித்திருப்பதை கனம் அமைச்சர் அவர்கள் சுட்டிக்காட்டினுர்கள். பண்டித நேரு அவர்கள் ஆட்சிப் பீடத்தில் இருக்கிற காலத்திலேயே அந்த உறுதிமொழியைப் பாதுகாக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளக்கூடாதா? அரசியல் சட்டத்தை திருத்துவதிலே என்ன தவறு இருக்கிறது? அரசியல் சட்டத்தைத் திருத்த முற்பட்டால் பண்டித நேரு அவர்களின் செல்வாக்கு பறந்துவிடுமா? அல்லது இந்த விண்ணப்பத்தை கனம் சுப்பிரமணியம் அவர்கள் பண்டித நேரு அவர்களிடம் எடுத்துச் சொன்னுல் இவருடைய பதவி தான் பறி போய் விடுமா? அல்லது மதிப்புக் குறைந்துவிடுமா? காங்கிரசு ஆட்சி குலைந்து விடுமா? மாருக அரசியல் சட்டத்தில் பாதுகாப்பு தேடப்படாவிட்டால், பொது மக்களின் ஐயப்பாடு நீங்காதாகையால் அமைச்சர் அவர்கள் விரும்பினுலும் விரும்பாவிட்டாலும், "திராவிட நாடு திராவிடருக்கே" ஆகின்ற நாள், விரைவாகவே வரும். அதை எவராலும் தடுத்து நிறுத்த முடியாது. இந்த நேரத்தில் அரசியல் சட்டம் திருத்தப்படாவிட்டால், பிற மொழி பேசுகின்ற மக்களுக்குப் பாதுகாப்பு தரப்படாவிட்டால், பொதுவாகவே நாட்டில் விடுதலை உணர்ச்சி மேலும் ஓங்கத்தான் செய்யுமே தவிர, குறைந்துவிடாது. அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்று திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் முன்னரும் திருத்தத் தீர்மானம் கொடுத்தோம். இப்பொழுதும் திருத்தத் தீர்மானம் கொடுத்திருக்கிறேம். அதை அருள் கூர்ந்து அமைச்சர் அவர்கள் ஏற்றுக் கொண்டு மத்திய சர்க்காருக்கு எடுத்துச் சொல்ல வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

**Mr. SPEAKER:** பிஸினஸ் அட்வைஸரி கமிட்டி கூட்டத்தின் முடிவுகளைப் பற்றி இப்பொழுது சொல்லுகிறேன்.

## II.—ANNOUNCEMENTS—*cont.*

### (4) BUSINESS OF THE HOUSE.

The House will sit till the 12th September 1960.

On the 6th, 7th and 8th instant, the Draft Third Five-Year Plan of the Madras State will be taken up for discussion.

On the 9th, 10th and 12th instant, Official Bills will be discussed.

The Privilege matter which was raised by the hon. Member, Sri S. Lazar, will be taken up on the 7th September.

The notice under rule 41 by the hon. Member, Sri M. Kalyanasundaram, will be taken up on 8th September.